பிஸ்மில்லாஹிர்றஹ்மானிர்றஹீம்.

இஃது

திருநெல்வேலிஜில்லா தென்காசி வடக்குமுகமோலிக்காதெரு

சே. செய்யிது முகைதீன் லெப்பை அவர்களின் குமாரரும்

இஷ்தியாத்தரீக் ஷெய்கு காஜா கருப்புஷாஹ் ஒலியுல்லா

அவர்களின் சீடருமான

சே. செ. முஹம்மது ஷாஹ் மஸ்தான் சாஹிபு

அவர்கள் திருவாய் மலர்ந்தருளிய

# மெய்ஞ்ஞான விகசிதக் கீர்த்தனையின்

# ரத்தினச் சிந்து.

இதனை

மேலபாளையம் காவி ஹசனலிபுலவரவர்களால்

பார்வையிடப்பட்டு

மதுரை,

அஷ்டலக்ஷ்மி விலாஸம் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1923

ரிஜிஸ்டர் காபி ரைட். 1342 ஹிஜ்ரி முஹர்றம் மீ 1 உ.

## முக்கிய கவனிப்பு

கடயநல்லூர், அ. செ. மூ. மைதீன்பிள்ளை தரகனாரவர்களும்
மேலபாளையம், சா. கா. ஷாஹுல்ஹமீது தரகனாரவர்களும்
,, மூ. யூ. மு. ச. ஷம்ஸுத்தீன் தரகனாரவர்களும்
ஆராம்பண்ணை, கா. மூ. முஹம்மது உதுமான் லெப்பையவர்களும்
மதுரை காஜிமார்தெரு, ஹகீம் சையிது முஸ்தபா இபுறுஹீம் சாயபு அவர்களும்
,, காஜியார்தோப்பு 3 கிர். தெரு, ம. கி. மதார்சாயபு அவர்களும்
கேட்டுக்கொண்டபடியால் இப்புஸ்தகம் பதிப்பிக்கப்பெற்றது.

ஷை புஸ்தகம் தேவையுள்ளவர்கள் அடியில்கண்ட விலாசங்களுக்கு வி. பி. மூலமாய் எழுதியும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

விலாசம்:—

சே. செ. முஹம்மது ஷாஹுல்
மஸ்தான் சாஹிபு.
வடக்கு கிழகோவிக்காதெரு,
தென்காசி தாலூகா,
திருநெல்வேலிஜில்லா.

ம. கி. மதார்சாயபு,
காஜியார் தோப்பு 3 கிர். தெரு,
மதுரை.

# ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இந்த மெய்ஞ்ஞான விகசிதக் கீர்த்தனையின் ரத்தினச் சிந்துவென்னும் பேருள்ள புத்தகத்தைக் கோர்வை செய்தவர்களும், அச்சிட முயற்சி செய்தவர்களுமான தென்காசி, சே. செய்யிது முகையுத்தீன் லெப்பையவர்கள் குமாரர் சே. முஹம்மது ஷாஹுல் மஸ்தான் சாஹிபவர்களின் அனுமதியின்றி ஷை பேருள்ள புத்தகத்தையாவது அல்லது அதிற் சில பாகத்தைப் பிரித்தாவது மற்றொரு புத்தகத்தோடு கலந்தாவது அல்லது மெய்ஞ்ஞான விகசிதக்கீர்த்தனை யென்ற பேரை மாற்றி வேறு பேரிட்டாவது வேறெந்த விதத்தாவது அச்சுப் பதிப்பவர்களும் அச்சுப்பதிப்பித்துக் கொடுக்கும் அச்சுக்கூடத் தலைவர்களும் இதன் ரிஜிஸ்தரிலுள்ள சரத்துக்கு விரோதமான புத்தகங்களை வைத்திருப்பவர்களும் சட்டப்படி நடத்தும் பிரியாதுக்கு உத்தரவாதிகளாவார்களென்றி யாவர்களுமறிவீர்களாக.

இரண்டாம் பதிப்பு. புஸ்தகம் 2000.

பலாக மானகவி மெய்ஞ்ஞானக் கீர்த்தனைகள்
    பாடுந் திறங்க ளாமே
நேருதிப் புள்ளகவி வாணர்கள் மெய்த்திடு
    நேசங்கள் யாருங் காண்கில்
நெறிபூர ணைச்சிந்தை யாகத் துலங்கிடும்
    நீதியருண் மோட்சம் விளங்கும்
நித்தந் தெரிந்திந்தப் புத்தக முணர்ந்தோர்க்கு
    நிகரற்ற வாழ்வ தோங்கும்
நீதமுடனேனம்ஷா ஹால்ஹமீ துப்புலவ
    விகழ்த்து கவிவளர ஆமீன்.



புதுநகரம் நத்தகர் சாஹிபி ராவுத்தரவர்கள் குமாரர்

புலவர் சிகாமணியாகிய

**ஷெய்கப்துல் காதிறுப் புலவரவர்களியற்றிய**

## சாத்துகவி.

ஆசிரிய விருத்தம்.

திருவுலவு நீர்வளஞ் செந்நெல்வயல் கன்னல்சேர்
    திகழ்மணி கொழித்த தடமார்
தென்காசி நகருறையும் செய்துமுஹ்யித் தீன்லப்பை
    செய்தவத் தோன்ற லானோன்
மருமலர்ப் புயமெனவரு மதிகொள்ரஞ் சிதக்கவிகள்
    வருஷிக்கு மெழிலி னிகராய்
மஸ்தா னெனுமுஹம் மதுஷாஹு மஃரிபா
    வழியின்முக் கனியொப் பதாய்
தருவைங்கர் மெய்ஞ்ஞான விகசிதாத் தினநாமம்
    தகைகொள்கீர்த் தனைகள் செய்தான்
தஞ்சமருள் ஸைபுல்லா ஷாஹுகா ஜாவித்தனைத்
    தரணியோர்க் குபகார மர்ப்ப
பொருளுதவி யச்சியற் றினிறைவ னருளினுற்
    பொலியுமிக் கவி யுரைத்தோன்
புதுநகரி லுறைநத்தகர் சாஹிபருள் தோன்றல்பெயர்
    புகல்ஷெய் கப்துல் காதிறே

பிஸ்மில்லா ஹிர் றஹ்மா னிர் றஹீம்,

இஃது

——(:×:)——

# மெய்ஞ்ஞான விகசிதக் கீர்த்தனை,

## ரத்தினச் சிந்து

உஜூதுதயமாகி யெழுந்த வஸ்துவின் துதி.

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

சுழிமுனை வீடுலாவிச் சுடர்விரிந் தெழுந்த காதத்
தெளிவுறுஞ் சுகவாரியாய்த் திரளொளி மணியாய்க்கூடி
வழியொடு குந்து கன்ஸுல் மருமிமக் காமிற் சென்றே
அழிவிலா தனைத்தாம் றப்பில் ஆலமீன் காப்புத் தானே.

——()——

பதம்-இராகம்-கமாஸ்-ஏகதாளம்.

பல்லவி.

மூல முதலைப் பாருமே-மோன-முத்திதருஞ் சோதியருள்
மூலமுதலைப் பாருமே.

சரணங்கள்.

1. மூலமுதலைப்பாரும் முச்சந்தி வீட்டிற் சேரும்-கோலமுள்ள
   கோலமுள்ள வாலைமதிஸ்-தூலமதி லேநிறைந்த (மூல)

2. மோகமுகில் திரண்டு-முடுகுந்தொனி முழங்கிப்-பாகமுடன்
   பாகமுடன் கருவூரிற்-பாய்ந்துருச் சமைந்துநின்ற (மூல)

3. அகார வுகார மொன்று-யாவசி காரஞ்சேர்த்து-மகாரமோடி.
   மகாரமோ டிகாரங்கூடி மருவிநின் ருடி நிற்கும் (மூல)

4. ஆங்காரத் தீரமுட-னடங்காதொழித்த காதன்-ஓங்காரமாய்
ஓங்காரமாய் வட்டமிட்டே கூடாடிக்கொலுவிருக்கும் (மூ)

5. அங்கன்றடர்ந்தேறியேகிங்கென்றொடுங்கிச்சிறும்-கங்குலற்ற
கங்குலற்ற செங்கமல-மங்கள மஹ்லூமறுன. (மூல)

6. கலிமா மாத்தின்கனி-கனிந்தே பொழுருக்தொனி-வலிய (பொருள்
வலியபொருள் யாஹூவதை-வருந்திச் சிரசிலேற்றி. (மூல)

7. சித்திரக் கவிதைமிகச் செப்பு முஹம்மதுஷாஹு-முத்தி (பெறும்
முத்திபெறும் ஜௌஹறென-முன்னணியாய்நின்றிலங்கும்

பதமுற்றிற்று.

—(:*:)—

கடவுள் வணக்கம்.

வெண்பா.

சூலமா யஹததினுள் முழங்கியெழுந் தஹ்மதெனுங்
கோலமா முஹம்மதுவாய்க் குவிந்தெழுந்-தாலமதில்
எவ்வுயிரி னுங்கலந்தே யேகமய மாய்நிறைந்த
செவ்வையிறை யோனருளைச்-செப்பு 1.

செப்பியபின் சிந்தைகொண்டு சென்னிமடத் துட்புகுந்து
கப்புகடுமுனை விரிந்து கதிசொழுகும்-ஹூப்புடனே
குதித்திலங் மெய்க்குருவைக் கொண்டணைத்துக்கருத்தூன்
பதித்திரு கண்கள்குளிரப்-பார். (றிப் 2.

பார்த்திடுவா யீரேழு பதினாலு லோகமுமே
பூத்திலங்குங் கண்ணாடிப் புதுமணிக்குட்-டோத்திரமாய்க்
கண்டுதொழு திறைஞ்சி ஹக்கெனவே புக்கியமு
தண்டு சுகித்திருப்பா-யுற்று.

பதம்-இராகம்-இங்கிலீஷ் மெட்டு-ஏகதாளம்,

பல்லவி.

நாயனை நாடிடுங்கள்-அநுதினம்
நல்வழி தேடிடுங்கள்.

அநுபல்லவி,

1. நாயனை நாடில் நலமும் நமக்குண்டு
சாயலினை போக்குங் கலிமாக்கொண்டெப்போதும்,

சரணங்கள்,

2. ஊக்கை யதித்திடவே-விர்கிறேன்
கலிமாவி னுட்பொருளை
எக்கால மும்பெரியோன்-இல்பினில்
இல்லா வெழுத்தைச் சேரும்
ஊக்கில்லா மலை குருபாதம் நாடுங்கள்
ஊக்கான காட்சியைக் கண்டு மகிழலாம். (நாயனை)

3. பொய்மை யகற்றிடுங்கள்-பூவுலகினிற்
புண்யத் தன்னைத் தேடுங்கள்
மெய்மை யறிந்துணர்ந்து-அதில்வரும்
மேன்மை தன்னைத் தெளிந்து
வையந் தனில்வந்த செய்யிதிறஸூலை
மெய்யாரமாகவுன் னுள்ளத்திற் போற்றியே, (நாயனை)

4. முப்பொருளைக்கூடுங்கள்-மூமீன்களே
மோட்ச வழிதேடுங்கள். )
எப்போதும் போற்றிசெய்து-இறையோனை
ஏற்றித் தொழுதிடுங்கள்
செப்பமுடியாத செல்வர்மு ஹியித்தீனை
முப்பாதைக் கப்பாலே முத்திப் புகழ்வதுடன் (நாயனை)

5. வாய்வுக் கலைமீதிலே-பறக்கின்ற
வட்ட வடிவதனை

ஒப்பில்லா மனுணர்ந்தே-தவநெறியி
னுட்பொருளைத் தெளிந்தே
சேயிழையாகிய செல்வக்கன் வாலையைத்
தாயென்று போற்றியிரு தாள் பணிந்தேற்றியே. (நாயனே)

6. சுழிமலர்ப் பள்ளியிலே-நிரம்பிசித்தும்
சூட்சச் சுடரைமன
விழியச லறிந்துணர-விழங்கிடும்
விண்ணி லுயர்மதிபோல்
ஒளிவி லொளிவாய்மூ வட்டத்து ளிலங்குந்
தெளிவான நீன்நின்முஹம்மதைப் போற்றியே. (நாயனே)

7. மாய துனியாவையும்-நம்பியே
மருண்டு திரியாதையும்
ஞாயமல் லக்காணது-சொன்னேமெஞ்
ஞானிக ளாகமாட்டீர்
தாயக னாகிய நாயகனைத்தினம்
தாம்தாம் சரிசரி தீம்தீமெனக் கூவி. (நாயனே)

8. இந்த முறையாகவே-யெனக்கு
மியம்பிடு மென்குருவைச்
சிந்தை தனிற் பொதிந்தே-யவருடைய
சீர்பாத மேபணிந்து
கந்த மலர்வாசங் கண்ணெதி ரேநேசந்
தந்திடுமென்றன் குருவொளி யைப்போற்றி. (நாயனே)

2-வது பதம் முற்றிற்று.

---

நபி நாயகமவர்கள் பேரிற் பாடிய பதங்கள்.

வெண்பா.

முத்தொளிவாய் வந்த முஹம்மதுர் றசூல்நபியை
சித்தம் புகழ்ந்தவர்க்கு நேசமுண்டாம்-பத்தியுடன்

மேல்வாசல் தான்கடந்து மேவினவர் வாலைமதிக்
கோலமது காண்பார்-குறித்து.

——(*)——

பதம்-இராகம்-தில்லானா-ஏகதாளம்

பல்லவி.

தறதறத் தானிம்த றத்திரனா-தீம்
தறதறத் தானிம்த றததிரனா.

அநுபல்லவி.

1. திறறத றநனீ சுதனீ றதனீ
தில்லானும் தில்லானும் தில்லான தில் லானத்தீம் (தறதற)

சரணங்கள்.

2. மஹ்மூத ரிங்கே வருவாரேடி வாசம் பரிமளம் வீசுமேடி
பஹ்முள்ள இல்மைத தருவாரேடி, பாவம் வாராமலே காப்
றஹ்மா னிடஞ்சென்று ரகசியம்பேசிடும் (பாரேடி
ராஜராம். போஜராம். வாஜரா முஹம்மதுவாம். (தறதற)

3. மூலமாய் நின்று பிரிந்தோரேடி-முக்கோணவீதியில்
(வந்தோரேடி
சீலமாய் நின்று தெளிந்தோரேடி. சிந்தையில் வுதிரு
(யுதித்தோரேடி
கோலம் நிறைந்திடும் லாமலிகா னடுவில்
குருவா யிலங்குந் திருவாமு ஹம்மேதடி (தறதற)

4. ஆதம்மகிழும்புதல்வரேடி அப்துல்லாபெற்றமுத்தானேரேடி
காதம் வழிகமழ்ந்தேகரேடி. ஹக்கனருள்பெற்றயோகரேடி
சீதமதி வதன நாதரடி பரவித்
திகழு மமரர்பணிந் திறைஞ்சுமு ஹம்மதேடி (தறதற)

5. நிறக்கனிடமேறிச் சென்றோரெடி. சசடகற்றமொழி விண்
(டோரெடி
மிக்க கனிமாமுதுண்டோரெடி மீமித்புதையலாய்நின்றோரெடி
எக்காலமும் புகழேத்தும் முஹம்மதுஷா
ஹுமெக்கா த்ரவருளும் குருவாமுஹம்மதிதடி (நிறக்க)

3-வது பதமுற்றிற்று.

---

பதம்-இராகம் ஜாவளி-அடதாளம்.

பல்லவி.

ஆதி மஹ்மூதே உமை யோதி நிதம் தேடுதே.

அநுபல்லவி.

1. சோதியொளி வாக மறை, யோதித்தவத் தேகவெங்கும்
நீதமுள்ள வேதா விறைத்தூதா உமைத் தேடுதே (ஆதி)

2. ஆதிசமுகத்தில் அருள்மீமாய் நின்றோரே
அந்திபகலாக என் சிந்தைவினைபோக வுமை
யடுத்தேன் சரந் தொடுத்தேன் பதம்
பிடித்தே னுமை நாடுதே. (ஆதி)

3. செங்கமல மீதிற் சிறந்தா சாளும் நபி
செகம்புகழும் வேதாவெனத்தகமகிழும் போதா எங்குந்
தெளிவே கதிரொளிவே விழி
நடுவே உமை நாடுதே. (ஆதி)

4. கானக மீதினில் மோனம் விளைத்தோரே
கனல்வீசியவோடை தாவிக்கமலமணிமேடை அங்கு
கண்டே னமுதுண்டேன் மையல்
கொண்டே னுமை நாடுதே (ஆதி)

5. அந்தர மேவிய சுந்தரமானோரே
அண்டர்புகழ் கோனே தினஞ் சண்டுமகிழ்வேனே யெனக்

காசையுள நேசா விசு
வாசா உமை நாடுதே. (ஆதி)

6. சந்ததமுந் துதிக்கும் தமியன் முஹம்மது ஷாஹுல்
சிந்தை குடிகொண்டே னுங்கள் விந்தைப் பதந்தண்டேன்,
ஜெயமே ஞானே தயமே சோதி (ஆதி
மயமே யுமை நாடுதே: (ஆதி)

4-வது பத முற்றிற்று.

---

பதம் இராகம் காம்போதி ரூபகதாளம்.

பல்லவி.

கண்டுக்கொண்டே னென்று சொல்லுவாய் நபியுல்லா
கண்டுக் கொண்டே னென்று சொல்லுவாய் (ஙைக்

அநுபல்லவி.

1. அண்ட பிண்டங்க ளெங்கும் நின்றரசாளும் நபி
முண்டக மலரடியைத் தொண்டுசெய்தனு தினமும் (கண்டு

சரணங்கள்.

2. ஆதியொளியிற் பிறந்தோர் சதுவர் சூழ
ஐனுல் எகீனி லிருந்தோர்
சோதிசுடரா யெழுந்தோர்-அருளிலங்குந்
துய்யோன் கொலுமுன் சிறந்தோர்
நீதியுலக மெங்கு மோரசாளு நபி
சாதியிலுயர்ந்தமணி சற்குரு முஹம்மதுவைக் (கண்

3. ஆதங்கிளையின் சிங்கமாம் அப்துல்லா வீன்ற
ஆரணவூர் சேர்க்கும் வங்கமாம்
காதங்கமழு மங்கமாம்-கிலேமதியாக்
கதிரொளி வீசுந்தங்கமாம்
வேதத்திறந்த கோவசம் நீதம்பரந்த தேவராம்
வெற்றி தந்தருளுங்குரு முஸ்தபா முஹம்மதுவைக் (கண்

## மெய்ஞ்ஞான விகசிதக் கீர்த்தனை

4. வாசிபுறாக்கிற் றுவியே-வானேழுந் தாண்டி
வல்லோனருகில் மேவியே
தேசி நடனக்கூவியே, கலிமாவென்ற
தெளிவை யறிந்து லாவியே
காசினியோர்களுக்குக் கதியைக் கொடுக்குமறை
பேசியேவெற்றிகள் பெற்றபெரியோன்முஹம்மதுவை

5. கஞ்ச மலரின் வாசமே-மேனி முழுதுங்
கமழுங் கஸ்தூரி வீசமே
செஞ்சொற் கவிகள் பேசமே-யத்தொண்டிக்கவர்
சேவடி யாதார நேசமே
வஞ்சக மேவல் சூனியம் வல்பினி வராமலவர்
தஞ்சமுற் றடிபணிந்தேன் நாயக முஹம்மதுவைக்

6. மக்கநகரிற் பிறந்தோர்-கலை முழுதும்,
மதீன நகரி லணைந்தோர்
திக்குத் திசையும் நிறைந்தோர்-தீனோர்களுக்கு
தீங்கணு காமற் புரிந்தோர்
மிக்கச் சிறியவன் முஹம்மது ஷாஹுல் தனக்கு
ஹக்கனருளைப்புகட்டுஞ் சொற்கவாழ்முஹம்மதுவைக்

5-வது பதமுற்றிற்று.

---

பதம்-இராகம்-தோடி-ஏகதாளம்.

பல்லவி.

கண்டதை யெவராலுங்-கணக்கிடக்கூடாதொருபோதும்

சரணங்கள்.

1. கொண்ட மவுனமணிக் குருவருள் பாதம்
குண்டலிக் குள்ளிலங்குங் குருவடிவைக் (கண்ட)

2. ஆவினிலாடியருள் ஹூவினி லோடிக்களி
மாவினி லரசு செய்யு மயப்பொருளைக் (கண்ட)

3. அண்டத்தில் சூழ்ந்திடும் பிண்டத்தில் வாழ்ந்திடும்
எண்டிசை யும்பரவும் இறைக் குருவைக் (கண்ட)

4. தீன்கொடி வீசிடும் மீம்கொடி பேசிடும்
தேன்கனி யதிரசமாங் கனியமிர்தைக் (கண்ட)

5. பத்திகள் பாவியே முத்திகள் மேவியே
சித்திக்கும் பரஞ்சோதியைச் செகத்தின்பிசைக் (கண்ட)

6. உதித்திடுமூலமாய் உலாவிடுந் தூலமாய்க்
கதிதருங் கமலமணிக் கருவறையைக் (கண்ட)

7. யாஹூவு மீமுமாய் யாஸின் காபு மாய்
ஆஹூவதி லமையும் ஹாமீமதைக் (கண்ட)

8. பேரின்ப வாழ்வதைப் பிரியமுற் றடுத்திந்தப்
பாரில்மு ஹம்மதுஷா ஹூ பகர்ந்திட்டேன் (கண்ட)

முற்றிற்று

நபிநாயகத்தின் பேரில் பாடிய கண்ணிகள்.

1. அகியான் தாயித்தா வென்ற ஆதி திருக்கடவி
லாஷிக்காய் நின்றோ ராமடி—பெண்மாமயிலே
ஆஷிக்காய் நின்றோ ராமடி
அகியான் காரிஹா மீதில் அழகா மயிலாய் நின்ற
அஹமத் முஹம்மதாமடி—பெண்மாமயிலே
அஹமத் முஹம்ம தாமடி

2. அருவில் மணிவிளக்காய் ஆலமெல்லா மொளியா
யானூ முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
யானூ முஹம்ம தாமடி
குறஷி [illegible]த்துதித்த கோஜா முஹம்மதுவைக்
கொண்டா[illegible] கண்டு நில்லடி—பெண்மாமயிலே
கொண்டாடிக் கண்டு நில்லடி

3. சல்த்தானன் ஷஹீதுவைச் சூழும் பெரியோர் கண்ணித்
தோற்று முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
தோற்று முஹம்ம தாமடி.
உல்லாச மாக வெண்ணிற் குல்லைனியாய் விளங்கு
புண்மை முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
புண்மை முஹம்ம தாமடி.

4. மூன்று மொன்றாய்ச் சமைந்த முன்னோன்பிகாவில் கடு
முகப்பி லுதித்தோ ராமடி—பெண்மாமயிலே
முகப்பி லுதித்தோ ராமடி
வேண்டும் பெரியோருளத் தாண்டா ரியற்றிடும்
வேதர் முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
வேதர் முஹம்ம தாமடி

5. தாஜு லன்பியாவெனத் தக்கோன் முத்திரை பெற்ற
தாஹா முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
தாஹா முஹம்ம தாமடி.
பேசும் புருகானதில் வீசுஞ்சுடராய் வந்த
பிரபை முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
பிரபை முஹம்ம தாமடி

6. இருதயக் கமலத்தி லில்லெனுங் கலிமாவி
லிலங்கு முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
லிலங்கு முஹம்ம தாமடி
சுருதி யகத் தெளிவி லுருதிதரு மானந்தச்
சோதி முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
சோதி முஹம்ம தாமடி

7. அரிமலர்ச் சோலைசூழும் விரிமணி வீட்டினுள்ளே
ஆசனம் போட்டுக் கொள்ளடி—பெண்மாமயிலே
ஆசனம் போட்டுக்கொள்ளடி
பரியென்ற ஹவைதனைப் பற்றிப் பிடித்திழுக்கும்
பாசத் தொழிலைச் செய்யடி—பெண்மாமயிலே
பாசத் தொழிலைச் செய்யடி

8. முத்திப் பணிந் திறைஞ்சும் முஹம்மது ஷரஹு வாக்கருள்
மோட்சந் தருவோ ராமடி—பெண்மாமயிலே
மோட்சந் தருவோ ராமடி.
சித்தி யுயர்த்துதித்து வஸ்தி யெல்லா நிறைந்த
செப்பித் முஹம்ம தாமடி—பெண்மாமயிலே
செப்பித் முஹம்ம தாமடி.

கண்ணிகள் முற்றிற்று.

---

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

## மெய்ஞ்ஞான விகசித ரத்தினச் சிந்து.

### காப்பு.

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அருவதா யளிப்புக் குள்ளே யாதியும் லாம தாகித்
தருவதாய்ப் படர்க்க ஹேயிம் றழைத்தபூங் கனியினுள்ளே
திருவதாய்த்திரண்ட முத்து திகழுற மீம தாகிக்
குருவதாய் தாதுன் வாழுமா ஹூவென்று நாமங் காப்பாம்
ஜாமமாய்ப் படர்ந்த சோதி நபியிரசு லுல்லாவாய்
சேமமா யுதித்த வள்ளல் ஷெய்கு முஹையத்தீனில்
நேமமாய்த் துலங்கும் மீரான் நிதிதரும் சித்தால் மூவர்
நாமத்தை புகழ்ந்து பாட நாயகா காப்பு நீயே.



### நபி நாயகத்தின் பேரிற் பாடிய சிந்து.

செந்தின் மாநகா மென்ற மெட்டு.

மக்கமா நக ருக்கர சாகிய
மாட்சிமை தங்கு முஸ் லீசர்—ஹாக்கின்
காட்சி யருளுப நேசர்—மிகு
மங்க ளம்புகழ் தங்கு மாதவச் சங்கை பொங்கிய பங்கயப்புய
மன்னரா கவே மாமதி னாநகர்
மன்று நிறை குண வாசர்—எனக்
கென்றுந் துணை யரு நேசர்

சொர்க்கமாம் பதி மீதினி லங்கிடுஞ்
சோதி நபி மஹ்	மூதர்—இறை
பாதி சதுமறை	வேதர்—வின்
அந்த ரங்கிக மூர்த்தி மீதெழூர் தங்க ரச்சுடர் தந்து லாவியே
சுத்தமாங் கனி மாமில்தீ னோர்களைச்
சூட்டு கிராமயப்	போதர்—வழி
காட்டு மறைநெறி	நீதர் [2]

அவ்வரை திமெக் கீன்மா மீதினி
லாசை மயில் வடி	யாகினோர்—துதி
யோசை யர் ஹூ வெனக்	கூவினோர்—நப்பை
அடித்து தெரிசனை கொடுத்தெதன் பவவினை விடுத்து சுஜூதிடத்
[தொடுத்துப் பழகி நின்
றுதினா யகன் றன்னோடு றைந்தொன்று
யாருநம் படியருள்	தாவினோர்—என்னுட்
சூழு மிதயத்தின்	மேவினோர் [3]

வாசிகர் வபு ருக்கினி லேறி யேழ்
வசனைக் கடந்தரு	ஷேறினோர்—நஹ்
ரீனைத் தெரிந்தருள்	கூறினோர்—அந்த
வல்லவன் றிருச் சொல்லி ரகசிய மெல்லை கல் புறைந் தல்லும்
[பகலும் பின்
னாங்கிடா தெழுந் தோங்கி வளர்ந்திடும்
வரிசை படருறை	மீறினோர்—தீனோர்
பிரிசமுற மனந்	தேறினோர் [4]

தீதிகோர் புற காபெனு வேதந்தை
நேசித்தவர்க்குமு	ஊட்டினோர்—அநிக்
தாசித்தவர்க்கொளி	காட்டினோர்—இவ் வு
செடிய வெறிருள் மடியச் செய்தருள் படிக மணிமொழி வடிவு
[துலக்கிநன்
னேயநா யகன் றன்னொடு சேர்த்தரு
ணிறைந்த பதியிருப்	பாட்டினோர்—நப்போ
டுறைந்த வழிமுறை	காட்டினோர் [5]

வெற்றிசே ரொளி யார்க ளணிந்திடும்
விண்ணின் மணிச்சுட ரானவர் — கஸ்துக்
கண்ணி னிறைதரு தானவர் — ஏக
வெளிகொண் மருசதிற் றெளிவுற் றிறைமகிழ் மொழிபெற் றரு
[ள்கொடுத் தொளிபொன் னெனும்பதி
மேவுந்தீ பவிளக்கொளி வாகிய
விஸ்தார மோங்கிடுந் தீனவர் — நற்ப
ரஸ்கார மெய்யருள் கோனவர் [6]

தீதகம் படர் பாதகனாகிய
திக்கபு ஜாஹிலை வென்றவர் — அரு
ளோங்கும்மிஃறாஜி னிற் சென்றவர் — கொடுந்
தீய குபிரினைத் தூய மறைநெறி யாயும் படிசெய்து தாயி மாக்கிறல்
தீனெனும் பயிர் சேற்றிப் பலன் கொளுந்
தேனமு தூட்டியே நின்றவர் — இறை
யோனொளி காட்டியாட் கொண்டவர் [7]

சல்லல்லா ஹுஅ லாமுஹம்மதென்று
சாற்றிடு போர் பவ நீங்குமே — மகிழ்ந்
தேற்றுந் திகா ரொளி போங்குமே — ஏக
சருவ புகழ் நிறை பெருகி வளரிறை தருவின் கனிரசம் பருகப்
[புகட்டிடும்
சங்கைமே வும்நபி பாதத்துச்செய்துனை
தாங்கு மீமா னிலை யாக்குமே — பிரு
ணீங்கும் படிமுகம் பார்க்குமே [8]

தாண்டொரு ஜாமத்துப் பள்ளிமக்கனிலே
தங்குங் குயில்வண்ண மாடினோர் — அருள்
பொங்குந திருமறை பாடினோர் — சென்னித்
தலத்தை யடுத்திட வலத்தை நடமிங்ஙி கலத்தைத் தெளித்
[துவைம புலத்தைத் திரட்டிக்கண்
தாக்கினோர் மலக் கூத்தினி லன்னம போற்
றூனவ னனேனை நாடினோர் — றஹ்
மானரு ஷேமிடக் கூடினோர் [9]

ஏறினா ரிறை யைத்தால் மருமேறி

வேர்த்தா ம்ணிச் சட ராகினார்—அகங்

கூர்ந்து தொழுதெழுந் தேகினார்—தனிப்

பிடங்கொ ளிருகலை நடங்கொண் மடமிசை படங்கொ ணடுநிலை
[நடங்கொள்ஜபமாத்திஸ்

லேறினா ரிற குல் மயி லாகியே

யிலங்குலா ஹூத்தாற வாகினார்—ஒளி

துலங்கும் புரு கபி யாகினார் [10]

காணும்ரூப மடங்களி லும்ஹூக்கள்

ஹூமீ மூஹம்மதைப் பதித்தான்—அதில்

மூமீன் முஹ்மித் தீனைத் துதித்தான்—தன்னிற்

களிக்கும் பஹறலை பொலிக்குந் தொனிரசஞ் சொலிக்கு
[மிதயமும்பலிக்குந் திருமுகங்

காட்டினான் றன்னைப் பாருமெனச் சொல்லிக்

காணுங் கமலத்தி லுதித்தான்—வெளி

தோணும் பதப் பொருள் விதித்தான் [11]

பக்தியாய்ச் சிந்து பாடித் துதித்திடும்

பையல் முஹம்மது சூஹூபால்—இருமை

செய்யு முஹம் மத ரீகை யால்—நிறை

பஞ்ச வளர்பிரு தஞ்சதனிலிறை கபுசின் சுடரொளி சொருக
[தருக்குரு

பாதமே கதி யாகினே னென்றுநற்

பட்சம்வைத் தாளும் றப் பானவன்—எனைபி

ரட்சித் தருளுகப் பானவன் [12]

முற்றிற்று

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

முஹியித்தீ னாண்டகை பேரிற் பாடிய பதங்கள்.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

நறைகமழ்ந் திலங்கும் வட்ட நடுவினிற் றெளிவாய் நின்ற
மறையெனுங் கமலப்பீட மருவியவ் வீடுறைந்த
இறையவ னருவில் நின்றே யிலங்கிடு முஹ்யித்தீனை
நிறைமதி யறிவா லென்றன் நினைவினிற் றுதிசெய் வாமே.

—•• ••—

பதம்-இராகம்-ஆனந்த பைரவி ரூபகதாளம்.

பல்லவி.

வாரும் பதந் தாருமே-வாரும் பதந் தாருமே

அநுபல்லவி.

1 சீருஞ் சிறப்பும் பெற்ற நாதமு ஹியித்தீனே [வா]

சரணங்கள்.

2 தெள்ளிய மாமலரிற் சிறந்த சிம் மாசனரே
விள்ளொணுச் சிரசின்பதி விரிவாமு ஹியித்தீனே [வா]

3 சாடுதவி நினைந்த கானக வேங்கையைக்
கூடத்திற் பிடித்தடைத்த குருவேமு ஹியித்தீனே [வா]

4 உள்ளத் துயிரே மோன முற்றசர்க்கு ஆனாரே
புள்ளிவட்டத் துள்ளிலங்கும் புதுமைமு ஹியித்தீனே [வா]

5 கிளைவைராவி யாக்கியே நித்திரையை போக்கியே
கனதவ மாகவந்த கருணைமு ஹியித்தீனே [வா]

6 முத்தா யுதிக்கு முன்னே சித்தா யிருந்த ஜெம்மல்
குத்தலிய தாயெழுந்த குருவேமு ஹியித்தீனே [வா]

7 பாடித் துதிக்கு மேழைப் பையல்மு ஹம்மதுஷாஹ்
கூடிய பொருட்குதவும் குத்துபேமு ஹியித்தீனே [வா]

முற்றிற்று.

பதம்-இராகம்-கமாஸ்-ஆதி தாளம்.

பல்லவி.

யான் யானுமை நம்பினே னையா-யாமுஹியித்தீனே
யான் யானுமை நம்பினே னையா.

சரணங்கள்.

1. வான்மீதொழுகிய தேனமிர் தக்கனி
தீன்கனி மாவா சாமுஹியித்தீனே. (யான்)

2. நாற்பத்தி முக்கோண நடுவில்நின் றுடியே
பார்க்கப் பகலொளி யாயுமு ஹியித்தீனே. (யான்)

3. அறுகோண வீட்டை யணைத்துமேற் சென்றருட்
கருவீட்டி னுள்ளென்னைக் காட்டுமு ஹியித்தீனே. (யான்)

4. திரைகடலேழுந் திரட்டி விளையாடும்
மறைப்பொரு ளாகிய மன்னர்மு ஹியித்தீனே. (யான்)

5. முன்னோ னறுஷினில் வீசுங் கொடிநிழல்
தன்னிலரசது தானுமு ஹியித்தீனே (யான்)

6. உம்பர் பரவிய செம்கபான் பகுதாதில்
இன்பமு றுர்தவத் தேர்தல்மு ஹியித்தீனே. (யான்)

7. மசியத்து மேவுமு ஹம்மது ஷாஹுல்பால்
நஸிஹத்துத் தந்திடு நாதர்மு ஹியித்தீனே. (யான்)

முற்றிற்று.



கட்டளைக் கலித்துறை.

கலிப்பாற் கறந்து மாப்பாற் கலக்கிக் கடைந்தெடுத்தம்
புலிப்பாற் பழக்கிப் புசிப்பால் வணங்கப் புகழ்ந்துநித்தம்
அலிப்பால் மதத்தே யருட்பால் ரசத்தை யள்ளியுண்டு
சலிப்பாற்றி வைக்கும் ஒலிப்பால்முஹியித்தீன் சரண்புகுந்
[தேன்.

பதம்-இராகம்-கமாஸ்-ஏகதாளம்.

பல்லவி.

ஆதி முஹையித்தீன் பாதமே-நா
னறிந்து தெளிந்து கொண்டேன்,

சரணங்கள்.

1 ஆதிமுஹ்யித்தீன் பாதம் அறிந்து தெளிந்து கொண்டேன்- [சாதிபல
சாதிபல வேறொன்றில்லை சற்குருவாய் நின்றிலங்கும் (ஆதி)

2 அனுவும் பூவியுமொன்று பாடி விளையாடியே-மணிதிரண்டு
மணிதிரண் டுருண்டெழுந்து மாநிலமெல் லாந்திகழும் (ஆதி)

3 நானில் முளைத் தெழுந்த நூருயி லங்கி நின்று-வானுலகும்
வானுலகும் பூவுலகுந் தானவ னருளாய் நின்ற. (ஆதி)

4 ஆரணக்கொடிபேறியே அண்டம்படர்ந்து வீசிக்-காரணமாய்
காரணமாய் நின்பொருளாய்ப் பூரண வடிவாய் வந்த. (ஆதி)

5 மன்றல் செறிந்த மலர் தென்றல் விரிந்த நகர்-தண்டலைசூழ்
தண்டலைசூழ்பகுதாதில் அண்டர்கள்பணிந்துபோற்றும்(ஆதி)

6 சின்னச்சிறுவனெனுஞ்சேகன்முஹம்மதுஷாஹ்-வன்னமுடன்
வன்னமுட னிக்கவியை வாழ்த்தினே னனுதினமும். (ஆதி)

முற்றிற்று.



பதம்-இராகம்-பைரவி-ஆதிதாளம்.

பல்லவி.

பாதமா மலரடியைப்-பணிந்தேன் முஹ்யித்தீன்
பாதமா மலரடியை.

சரணங்கள்.

1 ஆத நபிசுத ரப்துல்லா நகரில்
அருணவொளிபோற் றுலங்கிநின்றுடிய
வேத முஹம்மது பேர ரெனவந்த
வெற்றி பெருகிய முத்தி முஹ்யித்தீன். (பாத)

2 ஷக்கை யகற்றிமெய் ஹக்கதை நோக்கியே
சந்திர சூரிய னிணைவிளக் கேற்றியே
திக்கெல் லாஞ்சூழுங்கல் குலைதை போட்டியே
தெய்வ ஸபைசொலு தின்தீன் முஹ்யித்தீன். (பாத)

3 உந்திக் கமலத் திருதய நாட்டியே
ஓரெழுத் தான கலிமாவைப் பூட்டியே
சந்தித்த மேல்வீட்டிற் சாத்தைக மூட்டியே
சார்ந்து தொழும்போது ஷைகுரு முஹ்யித்தீன். (பாத)

4 பத்தெழுத் தான பதிதனி லேறியே
பாதைக ளானமுப் பாதைக் கடந்து நம்
சுத்த மயச்சுழி முனையின் மூடியைச்
சோதித்துப் பார்க்கையில் தோன்று முஹ்யித்தீன். (பாத)

5 எட்டெழுத் தானது நாலெழுத் தாகிப்பின்
ஈரெழுத் தானது ஓரெழுத் தாகியே
மட்டி லடங்கா மதிவட்டத் துள்ளாடும்
மாட்சிமை தங்கிய காட்சி முஹ்யித்தீன் (பாத)

6 காமிலொலி யான ஷெய்கு குருபொலி
கமல மலரடித் தாளிணை போற்றியே
சேமமுடன் முஹம் மதுஷாஹு-தி
நித்தம் விளக்கிய கத்தன் முஹ்யித்தீன். (பாத)

௦ முற்றிற்று.

பதம்-இராகம்-கல்யாணி-ஆதிதாளம்

பல்லவி.

மாதவ ராஜ மணியே-முற்றயித்தீன்
மாதவ ராஜ மணியே.

சரணங்கள்.

1 காதம் பரிமளிக்கும் வேத கவிபோரே
கமலக்கண்டிறந்தென்னைப் பாரும்-முற்றயித்தீனே.
கமலகண் டிறந்தென்னைப் பாரும்
பூதபேதமறுக்கும் நாதமணிச்சுடரே
புனிதமன்னவர் முடிபூணு முற்றயித்தீன். [மாதவ]

2 சித்தியுயர்கனிமா முத்தி லருளொளிவாய்
விரிந்தபூ வாஞலகும் வீசும்-முற்றயித்தீனே
விரிந்தபூ வானுலகும் வீசும்
சுத்தியுயர்ந்த மோனச் சித்தின்சாரக் கொழுந்தே
சருவ மயமாய் நின்ற கருவே முற்றயித்தீன். [மாதவ]

3 இன்பத் தோணியின் வாச லொன்பதை யுங்கடந்து
இல்லலி பெறுஞ்சர வீட்டில்-முற்றயித்தீனே
இல்லலி பெறுஞ்சா வீட்டில்
பம்பரத் தொளி வீசுங் கும்பத் தடிநடுவின்
பதிதனி லென்னையாளுங் கதியே முற்றயித்தீன். [மாதவ]

4 ரூத்திரக் கலைநான்கு நேத்திரந் தனிலாட்டும்
தூய்ய ரூறாத்து ரூப மேரே-யிருபதிக்கும்
தூய்ய ரூறாத்து ரூப மேரே
வாழ்த்திக் துதிக்குமலக் கோத்திரக் குருவே
வந்தி ரட்சிக்கும்பரி மளமே முற்றயித்தீன். [மாதவ]

5 வாசிப் பரியி லேறி மூசித் தொனிக்துள் ளாடும்
வளரொளி மலர்ப்பதம் போற்றி-முஹம்மதுஷாஹ்
வளரொளி மலர்ப்பதம் போற்றி
பேசுமுனைச் சுழிபில் வீசுமா சலமேறு
வெளியோ னருளப்பெற்ற நெறியா முற்றயித்தீன். [மாதவ]

முற்றிற்று.



## முஹியித்தீனாண்டகைபேரிற் பாடிய சித்து.

வண்ணத்தினமாலை—யென்ற மெட்டு.

அல்லா பெரியவன் றன்னிலே—வெளி
யான முஹம்மதை முன்னிலே—வைத்
தருளணை நோக்கி யென்கண்ணிலே—முத்தி
[illegible]ரிய தளமீதுயர் வளமோங்கிய பழமாங்கனி
ஆஷிக்கு முஹ்யித் தீனிலே—கண்டு
நேசிக்கும் பேர்கட்கி மானிலே [1]

சொல்லிற் புகழ்ந்து கொண் டாடியே—தம்
பில்லி னிலைத் தொன்றிற் கூடியே—வளர்
கல்பிற் புகழ்கவி பாடியே—திமி
சுடர்வீசிய கடல்வாசியீ தடரேறிய துடர்நீனொளி
சோதி முஹியித்தின் பாதமே—பணிந்
தோதி மகிழ்ந்துக்கொள் போதமே. [2]

சித்துப்பொன் ரத்தின முத்தொளிப்—பதம்
புத்தியில் வைத்தக ணத்திதனி—மனச்
சுத்தத் தெளிவைத்தி ன மொழி—உயர்
சிறமேறிய காவாருதி வரமாமது தருமாதவ
ஷெய்கு முஹியித்தின் சீரடி—தரும்
மெய்கொள் தீதாறருள் பாரடி. [3]

பாலைக் குடித்துளக் தேற்றுவாய்—சரக்
காலைப் பிடித்துய ரேற்றுவாய்—கன்னி
மூலைப்பதி திறந் தூற்றுவாய்—ஞானப்
பதிமண்டல மதுகண்டிட குதிகொண்டிதி லெதிர்நின்றொளி
பாயு முஹியித்தீன் கோலமே—கண்டு
ளாயுந்தவமனு கூலமே. [4]

காத்திருக்கெப்போதும் போற்றினேன்—கல்மு
ஹம்மதுஷர் மகிழ்க் தேற்றினேன்—என்றன்
கல்பிற் புகழ்கவி சாற்றினேன்—ஆதி
கருமாமறை புருமேவிய திருவாப்பதி தருவாரப்துல்
காதிர் முஹியித்தீன் சித்தமே—யென்னுட்
போதந்தரும் ஸாக்கூன் . முத்தமே. [10]

முற்றிற்று.

—•• ••—

பிஸ்மில்லா ஹிர்றஹ் மானிர்றஹீம்.

## நாகூர் ஷாஹுல்ஹமீ தாண்டகைபேரிற் பாடிய பதம்.

காப்பு விருத்தம்.

சத்தசா கரத்தின் மீது சமைந்தெழு முத்தைப் போலே
அத்தமாக் கடலி லூறு மவிபுலா மீமுக்குள்ளே
வித்ததாய் விளைந்த சோதி வீட்டினி லொளிருந்தீபச்
சத்ததாய் விளங்கு மீரான் சாஹிபை துதிசெய் வாமே.

பதம்-இராகம்-ஹிந்துஸ்தானி-ஏகதாளம்.

பல்லவி.

துங்கப் புகழ் பெருகும்-மாமதியே
துங்கப் புகழ் பெருகும்-மாமதியே
துங்கப் புகழ் பெருகும்.

சரணங்கள்.

1 அங்கப் பிரசங்கம் அருள் நிறைந் தெங்கும்
பொங்கு மீருனெனியே-மாமதியே
பொங்கு மீருனெனியே-மாமதியே. [துங்க]

2 ஆரணசிலா அமலது கூலா
பூரண மீரு னெனியே-மாமதியே
பூரண மீரு னெனியே-மாமதியே. [துங்க]

3 பதுமை மாமடலே பேரின்பக் கடலே
புதுமை மீருனொளியே-மாமதியே
புதுமை மீருனொளியே-மாமதியே. [துங்க]

4 அடுக்கணறக் கோரியி லானந்தப் பஜனைத்
தொடுக்கு மீருனொளியே-மாமதியே
தொடுக்கு மீருனொளியே-மாமதியே. [துங்க]

5 தோகை நடனஞ் செய்யு நாகைப் பதியில் மெய்
யோக மீருனொளியே-மாமதியே
யோக மீருனொளியே மாமதியே. [துங்க]

6 சிருட னிக்கனியைச் செப்பு முஹம்மது ஷாஹ்
நேரு மீருனொளியே மாமதியே
நேரு மீருனொளியே-மாமதியே. [துங்க]

முற்றிற்று.



## ஷாஹுல் ஹமீதாண்டகை பேரிற் பாடிய நொண்டிச் சிந்து.

அஹதெனும் தாத்ததிலே முழங்கிமின்
ருடிய சூஸ்திரப் பொருளாகி
உஹதெனுங் கடலுக்குள்ளே—குதித்தொளி
யோசையுகந்தவ்வல் பாசையுடன்
சகதலமேலெவைக்கும்—சற்குரு
செய்யிது முஹம்மதுர சூல்மரபில்
அகமகிழ் குருவாள—முஹியித்தீ
னண்டகை பேரொளி வாயுதித்துக் [1]

ககனமோ டறுசெலைக்கும்—புகழுறும்
ஹக்கிடங் கஸ்புகாரணங்கள் பெற்று
வெகுவள மாணிக்கபூர்—நகர்வாழ்
வேந்தரசன் குத்தாசருள் தவத்தில்
பகமுறும் பீரசாய்—நாகூரில்
பட்சம்வைத்தோர்களுக் கிச்சையுடன்
புகழுறுங் கீர்த்திபெற்ற—மீருனொளி
பூமலர்ப்பாத மென்சிர மணிவேன் [2]

மனமதின் கசடகற்றி — திரு
மவுனமணிக்குருவின் மதுபுகட்டித்
தினமருள் தீதறைக் — கண்டருள்
தெரிசித்துவரும்படி யிரசத்துடன்
விலவிய குருபதமென் — கல்வினை
விரித்துவைத்தருளினை பொருத்தியபின்
கனமிகுங் கமலக்கண்ணு — மென்றனைக்
காக்குமீருறொளி பதமறவேன். [3]

இருதயத் தொனியதனைத் — தனித்துநின்
றெட்டிப் பிடித்ததனை கட்டிக்கொண்டு
கருத்தைகந்து புலனொடுக்கித் — தவநிலை
கண்டத்தின் மேனடு தொண்டுபுக்கிச்
குருவுறை மூலைக்குள்ளே — ஹாஹூவெனுங்
கோட்டையிலே தனி காட்டுக்குள்ளே
திருநகர் வீட்டுக்குள்ளே — மீருறொளி
தெரிசனங்கண்டோம் பணிந்துகொண்டேன். [4]

குவலய பீதிஉள்ள — மனுக்களின்
குற்றங்களனைத்தையுந் தீர்த்துவைத்துக்
கவலைக்களைபை மாற்றி — யிறையவன்
கலிமாவின் தேன்மது புகட்டிவைத்துப்
பவக்களை யறப்பிடுங்கி — யிக்காவினில்
பதித்துவைத்தே பதந் துதித்திடவே
தவநிலைப் பேறுன — மீருறொளி
தாளடியேன் சிர மீதணிவேன். [5]

தெரிசனை தருங்குருவாம் — தீனோர்களின்
தீங்குக ளகற்றுங்கண் மணிக்குருவாம்
வரிசைகள் நிறைகுருவாம் — பாவலர்
வாக்கிலுதித்திடுஞ் சபைக்குருவாம்
அறிவில் வளர் குருவாம் — ஆரிபீ
னகமகிழ் கொண்டிடுஞ் சற்குருவாம்
கருவிழி லொளிர்குருவாம் — செய்யிதப்துல்
காதிறொளி பதங் கருத்தில் வைத்தேன். [6]

மாதுக்கோர் மதலையைப்போ—லென்றனை
மாருக்கருணைவைத் தமுதூட்டித்
தீதணுகாமற் காத்துத்—திருமுகத்
தீதாருதந்தெனக் காதாரமாய்
பாதுகாத் தருள்வதுடன்—அனுதினம்
பட்சம்வைத் தென்றனை ரட்சித்தருள்
சாதுக்குணங்கொடுக்கும்—செய்யிது
ஷாஹுல் ஹமீதொலி சான்புகுந்தேன். [7]

ஓதுங் கவியறியான்—கவிகளி
லுறுபிழை கண்டவ ரொருமிலைவாய்
சேதமதும் விதமாய்த்—தெளித்துத்
திருத்தியே மனமதில் பொருத்தியபின்
போதமதி மிகவாய்க்—கருத்தினித்
போற்றிப் புகழ்ந்துளந் தேற்றிடுவீர்
வேத முஹம்மதரின் ஷபாஅத்தும்
விளங்குந் தீதாதருள் பெற்றிடுவோம். [8]

ஆரிபீ னுலமாக்கள்—ஒலிமா
ரணிந்திடு நவமணி மஞ்சரியாம்
பாரினையரசாளும்—மன்னர்கள்
பவுசுடன் சிரம் பணிந்திடுகுருவாம்
ஊரினி லுறவுசெய்யு—மனுக்களி
னுறுபிணி யகற்றிடுஞ் செயக்குருவாம்
சீரிய நாவலர்கள்—பதவுரை
விளக்கிடும் ஷாஹுல் ஹமீதொலியாம். [9]

தவத்தி லுறவு நீட்டித்—துருபொலி
சாஹிபை யென்றனிரு கண்ணிற்காட்டிக்
கவுத்துடத் தீங்கையோட்டி—அவ்வல்
கலீமாவின் மதுவென்றன் வாயிலூட்டி
சிவத்துதி தன்னிற்பூட்டிக்—கலந்ததிற்
சிறக்க முஹம்மது ஷாஹு தன்னைக்கூட்டித்
தவுஹீது நிலைபூட்டி—யாண்டிடும்
ஷாஹுல்ஹமீதொலியின் னருள்பணிந்தேன்.

முற்றிற்று.

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

## நாயகம் காஜா மூஈனுத்தீனண்டகைபேரிற் பாடிய

பதம்-இராகம்-கல்யாணி-ஏகதாளம்.

பல்லவி.

சதுமெய்ஞ்ஞானதீப சமலோகராம்—சது.

அநுபல்லவி.

விது சிர் சிர் சிர் விழிநேர் நேர் நேர்
மது பார் பார் பார் மதி யேர் ஏர் ஏர் [சது]

சரணங்கள்.

ஜிஸ்தியாத் தரிக்கிலே—சேருங்குன்ஹூ தாத்திலே
கஸ்தி நீக்கு நாயகம்—காஜா மூஈனுத்தீனொலி
கால் தலை மேல் பதி மால். [சது]

கூறும் நூஹின்பீடமாம்—ஹூவின் மணிமாடமாம்
தேறுமில்மின் கூடமாம் செப்பும் ஞானப்பாடமாம்
செம் நரைக் கம் நிறைக் கும். [சது]

கல்பில் நாமஞ்சூடியே—கருவறைக்குள் கூடியே
சல்பிற் சூட்சம்பாடியே—சூதானவெளியிலாடியே
சூழ் பதி வாழ் துதி நீள். [சது]

காட்சிபெருகும் லாஹூத்தில்—கதிரொளிசூழ் ஜபறூத்தில்
மாட்சிமைசேர் ஜம்ஹூத்தில்—மருவியாடும் தம்ஹூத்தில்
மால் தலை மேல் மது பால். [சது]

மோனப்பாதம் போற்றியே—முஹம்மதுஷாஹேற்றியே
ஞானக்கவிகள் சாற்றியே—யாதுதன்னைத்தேற்றியே
யான் மற கேன் மகிழ் வேன். [சது]

முற்றிற்று.

---

பதம்-இராகம்-பூபாளம்-அடதாளம்.

பல்லவி.

சத்தியத் தவராஜரா-முஹம்மது
ஷாஹுல்ஹமீ வொலி நாதரைநீ மோகமுட னேதுதிசெய்
சத்தியத் தவராஜராம்.

சரணங்கள்.

1 சுத்தனருட் கனிமாக் கருவிட்டி னுள்ளுணர்ந்து
வெற்றி பெருகும் ஹக்கின் சித்தி வுதய மாகி
வேந்த ராஞோராம்-குண-சாந்த மாஞோராம்-உயர்
விண்டலமு மண்டலமு மெண்டிசையு மன்று செறி. (சத்)

2 அவ்வல்றஹ் மானிடத்தி லாரண நெறியைப் பெற்றே
யிவ்வுலகி லெவ்வுயிர்க்கு மின்பாச மாயுதித்த
எந்தங் குருவா-மலர்க்-கந்த மருவாம் புகழ்
இன்னிலமும் பொன்னிலமு மன்னரோன வுன்னிவாழுஞ்.

3 உஜூதை யறிந்துணர்ந்த வுலமாக்க ளும்புகழும்
துசிகர மானஇல்மில் வசிகர னுறைந்தான
தூய்ய வேதார-மரு-ளுய்யும் பாதராம் மனத்
துன்ப நீக்கி யின்ப மாக்குங் கெம்பீரா மம்புவியில். (சத்)

4 மூலப் பதிகடந்து முச்சுழி வாசல் சென்று
கோல மாதயீ மதிற் கொளுநிய கூறத்தாகிக்
கொண்டாடி நின்றோர்-மனக்-கண்ணுறு கண்டோர் திக்கிற்
ஹுப்புடனே றப்பனி லெப்பொழுதுஞ்செப்பிய சொல்.

5 குளிவனத் தடஞ்சூழும் குன்றி கட்டி நகர்வாழுங்
களிப்புறு மாவந்த மு ஹம்மது ஷாஹுல் வொலி
காமிலா ஞோராம்-சொர்க்க மூமின ஞோராம மகிழ்
கத்தனரு ளொத்தினமுஞ் சித்தமதி லுத்தமரு. (சத்தி)

முற்றிற்று.

இஃது.

ஷை நாயகமவர்களின் திருப்பேராகிய
காஜா ஜமால் ஷாஹ—வொலி யுல்லா அவர்கள் பேரிற்
பாடிய பதம்.

பதம்-இராகம்-வர்ணமெட்டு ரூபகதாளம்

பல்லவி.

கந்தந் திகழ் வாசா-எங்கள்
காஜா ஜமா லொலியே-நித்தியம்
கந்தந் திகழ் வாசா.

சரணங்கள்.

1. உந்தியின் சுழிவட்டத்தில் உதித்தாடுஞ் சோதியே
இந்தில் அருணதீபா கிருபைசெய் ஜமாலொலியே. [கந்த]

2. மக்காமன் மஹ்மூதாவில் மருவு மணிச்சுடரே
ஹக்கானவிகாவைக் காட்டும காஜாஜமாலொலியே நித்யம். [க]

3. ஆகாய வூஞ்சலதி லாடிடும் ஐனனேரே
வாகானமீ மதில்வாழும்வள்ளல்ஜமா லொலியேநித்யம் [கந்த]

4. பதன்மே மதன் கமழும் பகல்மதியானேரே
கதந்தரும் பிரே எங்கள் காஜாஜமாலொலியே நித்யம் [கந்த]

5. மருவளர் குண்டுகட்டி வாழும்குதுபா னேரே
சிறியேன் முஹம்மதுஷாஹ சிந்தையில் குடிகொண்டோரே []

முற்றிற்று.



## ஷெய்கு காஜா அஹ்மது ஷாஹுல் ஒலியுல்லா அவர்கள்பேரிற் பாடிய

அறுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்.

பொன்னுலா வியசெங் கோலன் பொற்பதி மேடை மீதில்
மின்னொளி பரவுகின்ற மேன்மைசேர் குருவைப் போற்றித்
தென்னுலா வியனைல புல்லாசேயஹ் மதுஷா ஹின்சீர்
பொன்னடி மலர்த்தாள் தன்னைப் போற்றியே வணங்குவாமே,

பதம்-இராகம்-பைரவி-ஏகதாளம்.

பல்லவி.

வந்தா தரவரு ளுவீர்—பதந்
தந்தா தரவரு ளுவீர்.

அநுபல்லவி.

பந்தாடுஞ் சுழிமலர் விந்தாடு நயனத்தி
ருந்தாடுமஹ்மது ஷாஹுலொலி யென்பீரே. [வந்தா]

சரணங்கள்.

வாசா வரந்தருநேசா எங்கும் வாசா வரந்தருநேசா
சந்த்ரப்ரகாசா நித்யம் வந்தெனைரட்சிக்கு மகாராசா
தேசாதிதேசர்புக ழாசாரமேவும்ஷெய்கு
காஜாபீரஹ்மது ஷாஹுலொலியென்பீரே. [வந்தா]

பூவே பூமணக்காவே ஒளிப் பூவேபூமணக்காவே
புகழ்சவிமாவே யென்றன் புத்தி மகிழ்ந்தோதுந்திருநாவே
தேவே திருநட்னப் பாவே திரண்டெழுந்த
ஆவேபகிலுதித்த ஹமீதொலிருபதிக்கும். [வந்தா]

சீலா செழுமறை நூலா குணச்சீலா செழுமறை நூலா
சிந்தையுள் மாலா காஜா செப்புல்லாஷாஹுதவத்தின்பாலா
கோலா குருநிலைமை மேலாய் நிறைந்தசர
விலாப் பீரஹ்மது ஷாஹுலொலியென்பீரே. [வந்தா]

வேதா விரிகடல்போதா சது வேதா விரிகடல்போதா
விரைகமிழ்பாதா என்னுள் வீற்றிருக்கும் எங்கள் குருநாதா
தாதா மனுநெறியின் நீதா முக்கண் திறந்த
சீதாபீர் அஹமது ஷாஹேஹயொளி யென்பீரே. [வந்தா]

பாடும் பதமருள் கூடும் கவிபாடும் பதமருள் கூடும்
பக்திமனதாடும் சிறு பையல் முஹம்மதுஷா ஹூ கொண்டாடும்
ஆடும் அறிவின்மலர் சூடும் முச்சுடர்விளை
யாடும் பிரஹ்மது ஷாஹேஹயொளி யென்பீரே. [வந்தா]

முற்றிற்று.

—•• ••—

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

என்முகச் சந்திரோன்றேன்றி பெழுங்கிரணம் போல்வீசிப்
பண்பகப் புலியைச்சூழும் பகரொணு விருளையோட்டும்
விண்முகச் சிரத்தில் வாழும் விரிகதிர் துருபென் பீரைக்
கண்ணெதிர் கண்டோர்க் கெல்லாங் கல்பது வெளிச்சந்தானே.

பதம்-இராகம்-ஆனந்த பைரவி-ஏகதாளம்.

பல்லவி.

ஏகப் பரவெளி ஞானமாம் அதிதுலாவும்
எங்கள் துருபொலி மோனமாம்.

அநுபல்லவி.

1 ஏகப் பரவெளியா யென்னுட் டிருவொளியாய்த்
தேகமதிலே நிறையும் யோகமில்லை யானதிரு. [ஏக]

2 ஆதியஹதாக விருந்தே—ஆசைபெருகி
அண்ணல் முஹம்மதாய்ப் பிரிந்தே
சோதிமெய்ச் சுடரா யெழுந்தே கலிமாவென்ற
சுருதி மறையாகப் பிறந்தே
நீதிசே ருலகமெங்கும் நேர்ஜமால் கமாலுமாகிச்
சாதிபேதமற்றிருக்குஞ் சற்குரு வணக்கமான. [ஏக]

3 அலிபுலாமும் ஹேயு மீமுடன் தாலுஞ்சிறந்த
ஐனெனுகஃனுமமணியாம்
கலிமா நடுவிலிருக்கதே — கடனஞ் செய்யுங்
காரணக் கமல மணியாம்
ஒலியெனுந் தொனிமுழங்கி யோசைக ளெழும் பொருளாம்
வலியவ னுருவைநோக்கி வாழுமிஃ றுஜைக்காணும் [ஏக]

4 சித்தமதி லுற்றமணியாம்—சிரத்தில் மேவிச்
செஞ்சுடராய் நின்றமணியாம்
பத்தர்களுக் கொற்றமணியாம் பராபரமாய்ப்
பகலொளிவ தானமணியாம்
அத்தநிலே முத்திதரும் ஆரணமறை முடிவாம்
வெற்றியுள்ள புத்தியீமான் வட்டமதியான திரு. [ஏக]

5 அல்லுபகலற்ற மணியாம் அருள் பெருகி
யந்தரத்தி லாடுமணியாம்
சொல்லொணாச் சொருபமணியாம் புவியின்மிசை
சோதியாய்த் துலங்கு மணியாம்
வல்லிரு ளகற்றுமணி வாசிவடி வானமணி
யெல்லையி னிரம்பியரு ளில்லிலே நின்றாடுங் குரு [ஏக]

6 அந்த முடிவற்ற மணியாம் அண்டபிண்டமும்
அணுகியே யொட்டாத மணியாம்
வந்தவழி யந்தர நோக்கி — ஸாஜுது செய்யும்
வல்லவன் றாதானமணியாம்
சந்ததமுமே புகழுந் தாசன் முஹம்மது ஷாஹின்
சிந்தையிலுதித்த மணி செம்பொன் னலங்கி வாழும்.

முற்றிற்று.

பிஸ்மில்லா ஹிர்றஹ்மா னிர்றஹீம்.

இஃது

காஜாஜமால் ஷாஹு ஒலியில்லா அவர்கள் செல்வப்புதல்வராய் அஜ்மீரில் சிவித்தாசாண்டிருக்கும் காஜா- ஜம்அலிஷாஹு சாஹிபு அவர்கள் பேரிற் பாடியபதம்.

பதம்-இராகம். கமாஸ், ஆதிதாளம்.

பல்லவி.

அந்தாக்திகழ் சுந்தரர் ஜம் அலியேபக
லரிசேர்ருதாள் மறகே னெருபோ திலுமா முகில்சொரிந்
தந்தாந்திகழ் சுந்தரர்ஜம் அலியே.

அநுபல்லவி.

1 விந்து முனைவிரி கந்தம்போ லெங்குமென்
விழியானது சுழிதாவிமெய் யொளிவீசிய தெளிவேதரும்

சரணங்கள்.

2 உற்றசரசத் துறவுற வாடிய லீலா-என்றன்
ஓமெனுங் கோட்டைக்குள்த் தாமரசான செங்கோலா
அத்தமெனும்பரி சுத்தநிலைபுரிந்
தஞ்சஞ்சொடு கொஞ்சுஞ்சர மிஞ்சுஞ்சுடர் தஞ்சஞ்செறிந் (தந்த)

3 அலிபுமலரவிழ்ந் தாஷிக்கதிமண மீறிச்-சுற்றி
ஆவென்றெழுங்கங்கை ஹூவெனப் பாய்ந்தகந்தேறி
சலியா தொலிக்குங் கலிமா முஹம்மது
சரணத்தியல் பரணத்தொளி வருணத்தொடு கிரணத்துறும் (அ

4 கனகமண் காவெனு மெல்லையில் தில்மலர் சூட்டிச்சொந்தக்
கன்னியீர் கலசத் துன்னிய பாலெனக்கூட்டி
மனவாசி யேறு மலுஹறிற் சேரும் வின்
மதிமங்கள வதிசங்கித கதிபொங்கிய துதிதங்கிடும். (அந்)

5 வட்டமெனும் ப்ரவிர்த்திற் சிறந்தாடும் நாறைப்-பற்றி
வாரிவளைந்து பகாவதிற் சொக்கிய பாகை
இட்டமுட னென்ற வீமானிற் சேர்த்துநல்
லின்பம்படர் கம்பப்பரி நம்பும்பயல் தம்பக்திறக் (தந்த)

6 பஞ்சர[illegible]க்கொளி சூழ்குண்டு வெட்டியில் வாழும் எங்கள்
பாக்யஜமா லொலி யின்றஜம் அவிவை நாளும்
அஞ்சாமற் போற்று முஹம்மது ஷாஹுதவம்
அன்றின்றுமே மன்றென்றெளி ரென்றென்றமு தண்டொன்றி
[னேன் (அந்)

முற்றிற்று.

—∘∘ ∘∘—

விருத்தம்.

மருமேவுங்கமலமல ரினங்கள் சூழும்
மணவனறயா மாவியெனுமேடைமீதிற்
றிருமேவு மஹுஹ றெனுங்கனலாறாறித்
திரண்டொளிநாஹாசனமாங் குகையினுள்ளே
குருமேவு மொலிருடனங் குன்னென்றுனைச்
கூறுகின்ற பாசையை மெய்யேக்திப் பூசிக்
கருமேவுங் கலிமாவி னுமத்தேனைக்
கண்டுண்டு குருவருளின் கதிபெற்றேனே.

பதம்-இராகம். இங்கிலீஷ் கரமெட்டு ஆதிதாளம்.

பல்லவி.

கண்டுபிடித்தேன் கமலக்குருபதங் காரணமாக

அநுபல்லவி.

1 பண்டு நிறைந்திடுமெண்டல நாஹதைப்
பற்றித்தவமுத்தித்தின நத்தித்திடஞ் சித்தித்திடக் (கண்டு)

சரணங்கள்.

2 களித்த ரசக்கனி மாவினமிர்தத்தைக் கருதிப் பருகியே
பினித்தவிராகத் தெழுந்த தொனிப்பிடம்
வறச்சரமீறச்சொரி பாரச்சுடர் சார்ச்செறி. (கண்டு)

3 ஆவென்ற மத்தளம் ஹூவென்ற தட்டிடு மயிர்த மெய்க்கீதம்
சேர்வென் றுரைதரு மாவின் றிருநாமஞ்
செப்பப்பர முப்புப்பொரு ளொப்பப்பதித்தேப் பெப்போதுங். (க)

4 பள்ளைக்குகைமலர்க் குள்ளே பழகிக்காற் பளீர்ப் பளீரென்றே
மெள்ளக் குதித்தொளி துள்ளி விளையாடும்
மேலம்பர மாலம்சிகை பாலன் பதுகலமதைக் (கண்டு)

5 மேலடி வீட்டினுண் ணலடிதாவியே மேவிய சாந்தி
வாலடி மீதிற சூல்வடிவாகிய
மாசக்கர நேசக்குரு பாசக்கரு பூசக்கதி. (கண்டு)

6 காட்சிக் கழகான கன்சுல் மகுடியின் கடலைப்பார்க்கவே
சூட்சமா மூலச்சுடர்மதிக் குண்ணிலே
சூடப் பலனடைத்துதி கூடப் பவமோடத்துறை. (கண்டு)

7 கத்தன் றிகழொளி வெற்றுந் துருடோலி கமலம் போற்றியே
முத்து முஹம்மது ஷாஹுதனைக்காக்கு
மோக்ஷபத காட்சிப்பொருள் சூட்சத்திலே மூச்சுப்பதி (கண்டு)

முற்றிற்று.



## மெய்ஞ்ஞான சாகரவிளக்கச் சிந்து.

விருத்தம்.

ஆறுடன் மூன்றுங்கூட்டி யசைத்திடா திறுக்கிக் கட்டி
வீறுடன் சாத்தோ டொன்றி வெளிதனிற் றங்கி நின்று
கூறிடுங் குருவின் பாதங் குறிப்புடன் கண்டு ளாய்ந்து
தேறியே மகிழ்ந்து சிந்தைச் செப்புவேனெப்பு வீரே.

விருத்தம்.

சூட்சியமாம் நுகத்தமிழின் அமிர்தம் பொங்கிச்
சொல்லரிய முக்கோணத் துருகிப் பார்த்து
காட்சிதருங் கமலபதி வீடு நூத்துக்
சுதிர்முனையினடுவினி லெல்லை யாகி
வாச்ச தெல்லாமே யிருவருங் கண்டுதாண்டி
வளர்பெரிய கலியாணியடியைவாழ்த்தி
மாட்சிமை சேர்சிந்தாகப் பாடுதற்கு
மதுஹுருப் தின்றமயங்காப்புத்தானே

---

## மெய்ஞ்ஞானோதயச் சிந்து

தெள்ளியதமிழ்க்குதவு சீலன் என்ற மெட்டு.

பல்லவி

தன்னனே தனத்த தனே தானே-தனே
தனனே தனத்த தனே தானே-தானே
தன்னனே தனத்த தனே தானன்ன
தனத்ததனே தானே தனித்தனே.

சரணங்கள்.

1 முன்னவன் முஹம்மதர் தம்வேதம்-அதன்
முதலே பதிர்தவரின் பாதம்-தனே
யுன்னிப் பிடித்ததனு சென்னிப் பதிநிறந்தே
போடும்-பதம்-பாடு. (தன்)

2 அலிபினுகத்தவராயெழுந்து-அரு
ளாணத்தப் பணித்துள்ளி விழுந்து-நிதம்
ஒலியாய்க் கலித்ததிலேவலிய சட்டம்போதிந்த
வழியைச் சொல்லு மொழியை. (தன்)

3 ஷரீஅத் தரீகத்திற் றெளியாய்-அதைச்
சார்ந்ததரீக்கத்தது தசையாம்-இதில்
செறிந்த ஹக்கீக்கத்ததில் வரிந்த நரம்பெனவே
செப்பும் பொருளொப்பும். (தன்)

4 மஃரிபத்தெனுங்கடல் வளையம்-அதில்
மருவு மஹப்பத்தது மூளையாம் இந்த
அசுமகி ஸைந்துக்கும் பஹமாமுஃறி ஸாத்தை.
யன்னும்-சுமான் சொன்னும். (தன்)

5 இப்படி யமைந்தவித மறிந்தே-யிதில்
இயம்பிய மொழிகளைத் தெறிந்தே-புவி
முப்படி சடந்தப்பாலே அப்படிக் கப்படிச்சென்று
மோதி வருஞ் சோதி. (தன்)

6 கானகத்தனில் நின்ற வேங்கைத்-துடி
கலகலென் றலறியகாக்கை-யதை
மோனக் கொடிமரத்திற் காலைப்பிடித்துக்கட்டி
மொழிவாய்-பகர்-தெளிவாய் (தன்)

7 ஐமென்ற மணியது விழியாம்-நடு
வானந்தக் கூத்தாடினது ஒளியாம் சொல்லும்
ஐனில்லா அறபிதம்மை மெய்விழியிற் கோத்து நித்தம்
அடிப்பாய்-சரந்-தொடுப்பாய். (தன்)

8 மீமிலா முஹம்மதிப்பா வாகித்-திரி
மூவுலகுந் தானிறப்பமாகி-யிந்தப்
பூமிதனக்கெட்டாத ஹராமீமைப் பார்த்தருளைப்
பூசும்-நறை-வீசும். (தன்)

9 வானும் புவியுமொன்றாய்க்கூடி-மேவு
வளருங்கதிர்பதியுஞ் சோடி யேகக்
கோலைநிலைப் படுத்தி மீமிற் புதைத்துவைத்த
குணமே-வீசும்-மணமே. (தன்)

10 உந்திச் சுழிமலரி லுதித்துத்-தன்னு
ளொலிக்குந் தொனி ரசத்தைத் துதித்தப புகழ்த்
தந்தி பகனுடனைச் சந்தித் திறைஞ்சி யதின்
அடியைத் தொழும் வடிவை. [தன்]

11 தொண்ணூற்று தத்துவங்களைக் களைந்து மனத்
தறவெனுந் தில்லகத்து னுணர்ந்து மூலக்
கன்னிமனுக் கலசத் துவ்வி யெழுந்து கண்ணிற்
கண்டே-னமுதுண்டேன். [தன்]

12 அறுபத்து நாலு கலைக் யாகச் சித்த
[illegible]
சொரூபத்தை வளர்த்துமேற் றுருவத்தின் விளக்கொளி
துன்னும் அருள் மன்னும். [தன்]

13 நாலே ழிருபத்தெட் டியாதங்-கூடி
நவில் ஷாஹா குகஸிபி லெப்போதும் நின்ற
வேல்விழி மாதுவல்லி கலெழுபத்தேதான்ற
விதமே-சொல்-விதமே. [தன்]

14 ஐம்பத்தோ ரட்சரமு மமையும்-வீட்டி
லாகாய வட்டமாகச் சமையும் அனைத்த
நம்பி யிருபத்தெழும்பி யுதித் துயர்ந்த
நாட்டம்-நந்த-கோட்டம். [தன்]

15 யிருபத் தொன்பதெழுத்துங் கூடி யொன்று
மிசைந்திடு லாமக்காணிற்கூடி நின்று
துரியாதீத முனையில் திருமாமணிச் சுடரைத்
தாவும் அருள்—மேவும [தன்]

16 இருபத்தி நாலெழுத்திலாடே திகழ்ந்
திலங்கும் கலிமாத்தின் வாடை தனிற்
கருத்தைத் திருத்திவைத்த விரித்தைப் பழக்கிவித்தங்
காட்டும்—துப—ரோட்டும. [தன்]

17 ஈரொன்ப தாயிலங்கு மெழுத்தில்-எழும்
பக்க கருங்கதலிப் பழத்தில்-மது
வாரின்பங் கலந்ததை வாய்நிரம்பப் புசித்திட
வருமே—கதி—தருமே. [தன்]

18 பதினெண்கட்சரத்தை வாழ்த்தி-பதிற்
பாயுங்கலைமதியை யாழ்த்தி-நிறை
மதியி னிராமயத்தைத் துதித்தங் கனுதினமு
மகிழ்வாய்—தன்னைப்—புகழ்வாய். [தன்]

19 ஆறிரண்டைப் பத்ததிலே மூட்டி-யதைத்
தாடிய வாய்வுக்காலே நீட்டி-ரச
மூறுகின்ற பாலந்தினங் காத்தங் கிருதயத்தி
லூட்டும்—இல்லைக்—காட்டும். [தன்]

20 அஞ்சு மூன்று மெட்டான அகாரம்-அதை
யறிவிக்குந்தன்மறை யுகாரம்-இதைக்
கொஞ்சிக் குணங்கொடுக்கும் வஞ்சியைக் கைப்பிடித்த
கோலம் அதே-மூலம். [தன்]

21 மூலமென்ற கலிமாவின் முடிவை-இனி
மோதியலங்கரித்த வடிவைச்-சூழும்
வலை சொரூபமயக் கோலமதனை யெற்ற
வருந்தே—மனம்—பொருந்தே. [தன்]

22 காலெழுத்துந் தாலெழுத்திற் புகுந்தே-திசை
காற்பத்தி முக்கோணமதாய் வகுந்தே-யிரு
வாலெழுத்தி னூடுபுகுந்த காலெழுத்தை மேலெழுப்பி
யசிக்கும் மது—ருசிக்கும். [தன்]

23 அன்றிறை பதினெண்ணாயிரமும் தன்னு
ளடக்கி வைத்திருந்த பாயிரமும்—கூடி
யென்றென்று நிறைந்ததுவை நன்றென்று வெளிப்படுத்து
மிறையாம்-சது-மறையாம். [தன்]

24 ஆணிமுத்து மேவுங் கடல்வாசி-வனத்
தடர்ந்தமூ தாக்கலை வீசி-மெய்யை
யூணிப் பயிர்விளைத்துப் பேணி வளர்த்தெடுத்த
வுருவாம்-மணிக் குருவாம். [தன்]

25 மாயையென்ற பாசவலை நீக்கும் ஆய்ய
மரகத மயில்வண்ணம் பூக்கும்-அந்தத்
தாயை நமக்கமுத மீயும்படி யருளித்
தூக்கும்-கை-தூக்கும். [தன்]

26 ஏலக்குழலா ளென்ற மங்கை-அவ
ளிங்கிதஞ் செய்துவருஞ் சங்கை-யிந்து
வாலைமதி முகம்போற் கோலமது துலங்கி
வருவாள் மது தருவாள். [தன்]

27 மதுவைப் புசித்தானந்தம் பாடிக்-கமழ்
மருமலரலங்கலைச் சூடி-யெங்கும்
கதிரொளி பரவிய சதுமறை முடிவதைக்
களிக்கும் அருள்-சொலிக்கும். [தன்]

28, இரவு பகலை விட்டுத் தாண்டி-யெங்கு
மின்னி விசைந்து நின்ற தாண்டி-யதில்
சரமென்ற மீனைக் கோத்துப் பரமீதுணர்த்திவைத்த
சரசம்-தரும்-பரசம். [தன்]

29 சித்திரப் பூங்காவனத்தின் கோரி-யதிற்
சிறந்தரசாளுகின்ற கிரீ-ஆதி
முத்திரைப் படப்பாம் போடு நத்திவிளை யாடினதை
முழக்கும்-தினம்-பழக்கும். [தன்]

30 ஆதியொளி பரப்பி வீசும்-அரு
ளானந்த மறையது பேசும்-அந்தச்
சோதியின் வானதுவை நீதமுட ஞேதிமனத்
துதிபே-நிறை-மதியே. [தன்]

அண்டர்கள் பணிந் திறைஞ்சுங் கோனை-யெங்கு
மதிரச மொழுகிய தேனைத்-தினம்
உண்டடி பணிந்திறைஞ்சுந் தொண்டர்களை யெவ்விடத்து
மூக்கம்-அதி-லாக்கும். [தன்]

அண்ட பகிரண்டமு மூதண்டம்-அதற்
கப்பாலே நின்ற மணிக் குன்றம்-அதில்
நின்றருள் விளைந்து சோதி மன்றலாய்ச் சிறந்திலங்கு
தேசும்-விசு-வாசம். [தன்]

கஞ்சமா மலரின்பிசை வாழும் தவக்
காரண மெய்க்கடவுளை காணும்-கதி
தஞ்சமென்றே மையலது மிஞ்சினினை யாடுஞானே
தயமே சோதி-மயமே. [தன்]

எத்திசையும் போற்றுங் குருநாதம் தன்னில்
ஏகமய மாகிநின்ற போதம்-பர
முத்தமதி நுற்றிருக்க சித்திரத்தை முத்தொழிலை
மூட்டுமே-வழி-காட்டும். [தன்]

சித்திரக் கனலெழும்பி யாடும் அதிற்
சிறந்த சுடர்மகிழ்ந்து பாடும்-திருச்
சித்தமதி லுற்றிருக்க வெத்தினமு நித்தியதிற்
சேரும் புக-ழேறும். [தன்]

பதுமை மலராசனக் கோட்டை-சென்று
பார்க்கும் பரமாதி வீட்டைச்-சுற்றி
மதுவாய்ப் பொழிந்தரச பொதுவாய்ப் புனைந்தெப்போது
மணக்கும்-பிரோ டிணக்கும். [தன்]

நினைவா லுருச்சமைந்த கட்டை-யந்த
நினைவை விட்டொடுங்கினல் வெட்டை வெளி
நினைவினுங் கனவிலு மறவா திருக்கிலது
நிலவும்-பதம்-புகழும். [தன்]

38 நில்லாத நிலைதனைப் பிடித்தே—யென்றும்
நேசித்த வாலைசரங் குடித்தே வேதஞ்
சொல்லு மொழிதட்டாமல் நில்லுகின்றவை பொன்
சூட்டும்-மதி பூட்டும். [தன்]

39 நான்கு பத்தி முக்கோணத்தின் வீதி விழி
நடுவினிலாடி நிற்குஞ்சோதி யது
நூல்வட்ட வீடுபுக்கி வான்மீனொழுகி வரும்
கேமம்-கடை-ஜேமம். [தன்]

40 அஞ்சுவன்ன மஞ்சக்குயில் கூவும்-சோலை
யலிர்த்து மதுரங்கிளி மேவும்-இவை
கொஞ்சிடுங் குன்னென்ற சொல்லிற் றஞ்சமென்றே பெப் [பொழுதுங்
கூடும்-கீதம் பாடும். [தன்]

41 புத்தி லுறைந்திருந்த நாகம்-அதிற்
புகுந்தர சியற்றிய காகம்-ஆதி
வித்திலுற்ற முத்துசர மத்தியொளி திகழ்செக்கை
விரிக்கும் அனு சரிக்கும். [தன்]

42 எமனென்றியம்பும் பாவந்தள்ளித்—தன்னு
விசைத்தைம்புல னென்றனை கொள்ளி—யெங்குஞ்
சமன்மய நிறைதருஞ் சிவனடியைக் கருதிச்
சார்வாய் மகி ழார்வாய். [தன்]

43 ஐவர்க ளமைந்திருக்கு மிடத்தில்—ஒரு
ஆலவட்டமாய்ச் சமைந்த மடத்தில்—தவ
முப்புகின்ற வேகபோகங்கையுறச் செய்தெப்பொழுது
மோக்கும் இருள் நீங்கும். [தன்]

44 கயல்விழி வதனக்காற் றூடி—வட்டிலே
கம்பல் பூலறையிற் சென்றூடி—அதி
சுபத்தைக் கொடுக்குஞானே தயத்தைத் தெரிவித்தருள்
சொரியும் செயம் புரியும். [தன்]

45 கனற்கொடிக் கொழுந்தைத் வீசிச்—சுற்றிக்
கனக வளையம்பூண்ட வாசி - நீண்ட
புனற்கொடி மீதிலுற்ற மனக்கொடி வாசகத்தைப்
புரியும் மதி விரியும். [கன்]

46 பந்தின் மலர்விழிக் கம்பக்கோடி—பொறி
பறக்குங் கனலிற் சரகூடி—வெளி
யந்திர திகழ்மதியிற் சுந்தரங்கலந்து திரண் [கன்]
டாடும் சுரம் பாடும்.

47 அத்துவித முத்திதரும் நாதர்—எங்க
ளாசரியர் குருபொலி நேதர்-தங்க
ளுத்தியோகச் சித்ததனைப் பத்தியுட னத்துகின்ற
யுண்மை-வெகு-பண்மை. [கன்]

48 செல்வச் சிறப்பினழ கான-சிந்தைச்
செப்புமுஹம்மது ஷாஹ்மோன முறைந்
தல்லும்பகலுமொன்று யில்லிலிசைந்து நிற்கும்
அருளாம்-மறைப்-பொருளாம். [கன்]

முற்றிற்று.



## மெய்ஞ்ஞான கலிமாவடிச் சிந்து.

### வெண்பா.

ஆலமெலாநிறைந்தே யாளும்றஹ்மானெனிவில்
சீலமுருநன்னபி தஞ்சிரிலுதித் தோலமிடும்
மெய்க்கலிமாவடிச்சிந்தை மேவியொன்றதில்கலந்தே
வுய்யுந்தவந்தனைக்கண்டோது.

வேதம்பொருளறிந்தே யுண்மையைக்கண்டோடி
சாதுக்குருமொழியிற் றாண்டானை வதுமற்ற
இல்லல்லாஹு நடுவி விலக்கும்கபிரகுல்
சல்லல்லாஹு வென்றே சாற்று.

திருவுற்றிலவுகன்னை—என்ற மெட்டு.

1 அருகினி லுதித்தெழுந் தற்மதா முஹம்மதுவாம்
ஆலமெங்குந் தானிறைந்த ஆண்டவா—பல
கோலமதி லுட்கலந்து பூண்டவா—திரு
உருவிலுறை நலம்பெருகி யனுதின
மோசை யொளிபல பாசை புகழ்தரும்
உத்தமய மானபுகழ் விண்டவா—உணர்
சித்த மதிலுற் றுறைந்து நின்றவா.

2 முப்புள்ளியைத் தான்வளைத்து யீமதாக முன்னிறுத்தி
முச்சுடரென் றுள்ளமதில் வாழ்த்தினான்—அவ்வல்
அச்சுடரென் றேமகிழ்ந்து போற்றினான்—இதன்
முனையின் சுடரொளிச் சுனையின் படரதில்
முழங்கு மொசிவிடம் விளங்கி யெழுங்கதிர்
முன்னிலையிற் கண்டு மகிழ்ந்தேத்தினான்—என்றுந்
தன்னிலையைக் கொண்டுபதைப் பார்த்திருந்தான்.

3 அகாரமென்ற ஆதிக்க துகாரமென்ற மஹிஷாக்கோ
டமைத்தருளு மாதிறத்தமானவன்—யாவுஞ்
சமைந்ததிக லுடுறத்துறுங் கோனவன்—தரும்
அமலிலதிதலக் கமலநறைதிக
மூங்க மதுபிர சங்கமழுகிய
அம்புயத்தின் வாசமது வானவன்—அழிப்
பம்பரத்தினுட் சிறந்த தானவன்.

4 நீயல்லாதி யானுமில்லை நீபல்லாதி யாருமில்லை
நிச்சயமாய்க் கண்டறிந்து கூறினேன்—புக
ழுச்சிதமாய் விண்டறிந்து தேறினேன்—பிக
ளிலையி லடுவனை யுலையி லுருகிய
கேடமாகிய நாமஹறூவதின்
கேசமான வான்பரியி லேறினேன்—ஹக்கின்
வாசமது வுண்டுதனை யாறினேன்.

5 எட்டுமேக்கா னென்றசொற்க மெட்டையு மமைத்ததின்மே
லேகபதி லாமங்கானைக் காட்டினன்—அதில்
மோகமயில் வண்ணமதைச் சூட்டினன்—தன்னி
னிசையுமிருவிழி யசையுமணியொளி
யேத்தலாகிய காத்திமதிதனை
யில்லெனுங் கவிமாவென்று கூட்டினன்—நல்லச்
சொல்லென மனவுறுதி நாட்டினன்.

6 சூதணியா நான்மறையு மோதுகின்ற பாதையது
சொல்லிலடங் காதவழி காணுமே—அரு
ளில்லிலே யிருத்திமனம் பூணுமே—மிகு
சுருதியதுதனைக் கருதி மனதினி
லுறுதி தரும்வழி பருதியென வருஞ்
சூத்திரத்தைப் பார்க்க மதி வேணுமே—பார்க்கின்
நேத்திரத்து டெல்லெழுந்து தோணுமே.

7 ஹக்கைகல்லில் ஷ-ஹூ-து செய்வோர் கல்லை ஹக்கில்
[ஷ-ஹூ-து செய்வோர்
காமிலான மூமினோர்கள் யாருமே—தம்மில்
நேமிதமாய் நின்றதினை பாருமே—மூலக்
கனலிலொளிர் சாப் புனலில் தெளிதருங்
காபுனொடு வாவு ஹாமீமைக்
கண்டிருக்குங் காரணத்திற் சேருமே—அரு
ளுண்டிருக்கும் பூரணத்தைக் கூறுமே.

8 எவ்வஸ்திலுந் தான்கலந்து மெவ்வஸ்திலுந் தானெட்டாத
வேகமய மாய்நிறைந்த சோதியை—யிறை
பாகமற காதவனூ பூதியைத்—தின
மிடறகற்றிய படரினூற்றரு
ளோங்க லெனுங்குண சாந்தமூழ்கிய
என் பிரானிறைந்த இல்லை யோதியே—யென்னுள்த்
தம்பிரானைப் பின்றபா றுதியே.

9 அஞ்சொருத்துத் தீதாழுகை நோனைபெநெஞ்சகத்திலேயிருத்தி
ஆதாரவாய்த் தொழுதிறை பாதத்தை—மனம்
போதாவரப் வணக்குப்பிர சாதத்தைத்—தின
மள்ளியகமதி னுள்ளிற் புகட்டியே
அருஷூதனிலேறிப் பிசிசமுடன் ரெழு
தனிநுதல் மணிமந்த்ரப் போதத்தை—மனந்
துணிந்து ஸஹஜமது செய்யும் ஆதத்தை.

10 குத்திரவக் கத்திஹுற நேத்திரச் சுடரொளியை
சுற்றிநின்ற குண்டலியின் வாசியே—தொடர்ந்
தெற்றி வீசுங் கந்தமது பூசியே—தன்னைத்
தொடருங் குருவருட் சுடரைச் செபித்துட
தோசமகற்றியே ஆஷிக் கிறைபவன்
தோழனென்று கையணைத்துப் பேசினன்—இருட்
கோளணிபு லீசைவெட்டி வீசினன்.

11 முத்திலொளி தத்திபெழுந் தெந்தினமுந் தான்விரிந்து
முன்னணியாய் வந்தொளிவு தோணுமாம்—ஆதி
தன்னொளிவென் றுண்மனதிற் காணுமாம்—அருள்
முறுவிதெனுக்குரு வரிசைநலத்தரு
மூலமணிச்சா றுலினலங்கலே
மோட்சமென் றணையுமனம் பூணுமாம்—சொர்க்கக்
காட்சிதரும் வேதமிது தானுமாம்.

12 அலிபுலாமு ஹேறயு மீமும் பொலியுந்தாலி லேபுகுந்தே
அணைந்திடு மஹ்மதாமு ஹம்மதைச்—சுற்றி
பிணைந்திடுக் கண்ணுருப தம்மதைக் கண்டே
அலியுல் அலிமெனு வொலிக்குங் கழலத்தில்
ஆஹூ வொகிய பாருகண்டொளி
ரங்கமதி லேசிறக்குஞ் சும்மதைக்—கூடி
யெங்கு மொன்றுப்த் தானிருக்கும் ஜும்மதை.

13 உன்னடிமை யாகிலுமுன் றன்னடிமை யென்றெனையு
னுத்தபதி தன்னிலே வைத் தாளுவாய்—என்றன்
சித்தமதி லுற்றிருந்து வாழுவாய்—உய
ருச்சி யெல்லையில் மச்சில் மருவிய
வோசை யிருகலை வாசற் றிறந்தொளி
ருந்தியிற் றரித்த வொன்றில் வாழுவாய்—என்னுட்
சந்தித்துக் கண்பார்த் தருளாய்ச் சூழுவாய்.

14 ஆணுமில்லைப்பெண்ணு மில்லையலியுமில்லையென்றுசொன்ன
வந்தரங்கஞ் சொல்லுகிறேன் கேளெடி—பெண்ணே
முந்துமுதற் கோலமதிற் சூழெடி—மேலே
யறையுந் திரிவகை பறையும் விதமதி
தாதியந்தாம் பூதிபுவிநடு
வானமுச்சு டரிதென்றே யாளெடி—பிர
தாணவுட்ச டரைக் கண்டு வாழெடி.

15 பேச்சிலு நிறைந்ததிக மூச்சினே டுறைந்துவாழும்
பேரின்பத்தின் ஞானக்கனல் பூக்குமாம்—வழி
சேரின்பத்தி னிச்சயத்தி லாக்குமாம்—கதி
பெருகும் சுடரொளி தருதற்சய பதி
பேணித் தரித்தம னாணிப் பொருத்தியல்
பெருகுஞ்சுட ரமுதக்கண் பார்க்குமாம்—மிகு
வரிசைமிகுந் தருளில் சேர்க்குமாம்.

16 ஆதியந்த மறிந்திடாத சாதிபல பேர்கள்கூடி
யாண்டவ னென்றுசொன்ன வீம்பராம்—தன்னுட்
பூண்டவிதம் பார்த்தறியாச் சோம்பராம்—அவ
ரருளும்விநமது மருளு மிருள்மொழி
யகலமாற்றியே புகலுக்கவமதா
யாசைகொண்டல் லாஹுவென்று போற்றுவாய்—மணி
யோசையிற் கலந்தொன்றாகித் தேற்றுவாய்.

17 காலுமறை போலமிடு மூலமணி வாலைரூப
நாதவொளிக் குள்ளுறைந்த கோலமே—கட
ராதமென்னும் பாதமரு கூலமே—யிரு
நயன மிடைநடு சயம்பு குணமது
நாவிலுறவருட் பூவின் மணங்கமழ்
நற்றவர் தருணிறைந்த சீலமே—பணிந்
தெத்தினமுந் தான்புகழு மூலமே.

18 பதுமைமந்த ளத்தொனிகள் புதுமைபொத்த நுனிமேலேறி
பனீரென வொலிக்கும் வண்டினோசையாம்—கல்பு
விழிக்குலொளிருந் தென்றலாசையாம்—இரு
பதிவிலுயர்நலக் கதிரிலுயிர்குணச்
சுதியின் பசிமொழித் துதியின் மதிநிசழ்
பங்கயத்தின் றெங்கமழு வாசமாம்—எங்குஞ்
சங்கைதங்கு மானந்தத்தி னேசமாம்.

19 பூவிலுயர் வாசக்கலி மாவிலருள் தேசபதி
புருந்தராசாருநின்ற ராஜனும்—மெய்யைப்
பருந்தேழு விபத்தான போஜனும்—விழி
புருவமலர்நடுத் துருவமுனையொளி
பூசித்தருள்பதம் வாசித்தழகிய
பொன்னுலகை யாளும் பாத்தேரனும்—என்னுந்
தன்னிலே தரித்த பிரகாசனும்.

20 தத்துவத்தைத் தான்விளக்கு மத்துவித வித்தைதன்னைத்
தழுவித் தழுவிவினை யாடுவாய்—கல்லைக்
கழுவித் தெளித்தமலைச் சூடுவாய்—செழுந்
தருவில் வளர்மது வுநவி லுறைந்தருள்
தானே கமலப்பூ மானினி நுதயத்
தாளடியைப் போற்றிசெய்து கூடுவாய்—அதற்
காளாமை யரிக மனநாடுவாய்.

21 வாசிவட்டத் தோப்புக்குள்ளே பேசிநின்ற மூவரோடு
வாழ்ந்திருக்கும் வெண்ணிலவு தோன்றுமாம்—எங்குஞ்
சூழ்ந்திருக்குந் தன்னிலவு வேண்டுமாம்—ஆதி
வல்லபத்தரு வில்வகத்தினில்
வரிசை நலந்திகழ் குருசெய் பலனருள்
வாஞ்சையில் நிறைமதிக்கா னின்றுமாம்—முன்பின்
றுஞ்செய்பவந் தன்னைவிட்டுந் தாண்டுமாம்.

22 பூதலத்தி லேசிறந்த மாதவத் தரசவர்கள்
புகழுங் கமலமலர்த் தேனெடி—யுண்டு
மகிழுங் கலிமாவள்ளி மானெடி—சோதிப்
பொட்டணிந்திடும் நட்டநடுவணை
யிட்டநூன்வளை வட்டவளர்மது
புசிக்கப் புசிக்கருசி தானெடி—கண்டு
வசிக்க வசிக்க வாசிக் கோனெடி.

23 மக்கநகரிற் பிறந்து மதீன நகர்சிறந்த
மன்னர் மஹ்மூதுநபி கோத்திரம்—கல்பிற்
றுன்னு முஹியித்தீனென்னு சேத்திரம்—தம்மை
மருவி மனமதிற் பெருகத் துதித்திவி
மாசகற்றிடும் வாசகத்தியல்
மஞ்சுதவழ் நாகைமீரான் பாதமே—உன்றன்
னெஞ்சமுட னேபுகழ்ந்தப் போதுமே.

24 பூதலத்தி லேயுதித்த போதமுள்ள வேதியர்கள்
பூவடியை யென்னுளத்திற் போற்றினேன்—கவி
மாவடிச் சிந்தாக விதைச்சாற்றினேன்—சிரப்
புருவ மடலவிழ் திருவின் கடல்மது
பூரிபத்தினிற் சிதியற்றிய
பொற்கழல் பணிந்துரைத்தி லேற்றினேன்—என்றும்
கற்பகத் தருவென்றிதைத் தோற்றினேன்.

25 இருபதிக்கும் பேரிபற்றும் குருபதியாய் வந்துதித்த
எங்களின் நூருலொலி மெய்ராஜராம்— அருள்
தங்குல் குங்குமத் திரேகவாஜராம்— அவ
ரெழில் கொளிருந்ய விழிகொணிறைதவ
மென்றமுதவதை யுண்டு மகிழ்ந்துகொண்
டேந்து முஹம்மது ஷாவரீனேசராம் சொர்க்கச்
சாந்து பரிமளம் வீசும் ஷுசராம்.

மெய்ஞ்ஞான விகசிதக்கீர்த்தனையின் ரத்தினச் சிந்து
முற்றிற்று.

## பிழைதிருத்த வேண்டல்.

கொங்கல்.

கவியிற் பிழைகண்டுடன் திருத்தினோர்க்குக்
கர்த்த பெரியவன் றஹுமத் துண்டாம்
புவியில் நிதிவாழ்வும் சம்பத் துண்டாம்
புகழ்சே ராகிறில் மேன்மை யுண்டாம்
பவிதக் குணநிறை புகழு முண்டாம்
படைத்தோன் தீதாரின் காட்சி யுண்டாம்
நவிலு முஹம்மது நபியிறசூல்
நலமாம் ஷபாஅத்து நமக் குண்டாமே.
காளை ஹசனலிப் புலவரிந்தக்
கவியின் பிழைகளைத் திருத்தினதாற்
கோளை யகற்றியே யவருக்கிமான்
கொடுத்து றஹுமானே யுனதன்பாலே
நாளை மஹ்சருக்கு நபியிறசூல்
நலமாம் ஷபா அத்துங் கொடுத்தேயந்த
வேளை தனிலவர்க் குங்கிளைக்கு
மேலாங் கிருபைசெய்தருளுவாயே.

முற்றிற்று.